[3rd April 1958

Harijans in the matter of admission to Arts and Professional Colleges and appointment to posts in Government Services, to the Most Backward Classes; and

(b) if so, what it is?

THE HON. SRI P. KAKKAN : (a) The matter is being examined, Sir.

(b) Does not arise.

*Prohibition*

* 533 Q.—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) the number of cases tried under the Madras Prohibition Act (i) in the North Arcot district, and (ii) in each of the other districts from 1952 to 1957; and

(b) the number of persons belonging to the depressed classes and the number of caste Hindus involved in them?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) & (b) Statements[a] giving the number of prohibition cases tried from 1952 to 1957 district-wise and the number of persons belonging to the depressed classes and the caste Hindus involved in them are placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN : 1952-ம் வருஷம் முதல் 1957-ம் வருஷம் வரையில் கொடுத்திருக்கும் புள்ளி விவரங்களை பார்க்கும்பொழுது மதுவிலக்கு கேஸ்கள் அதிகரித்துக்கொண்டே போகிறது. அதே நேரத்திலே தாழ்த்தப்பட்ட மக்கள் மீது போடப்பட்ட கேஸ்கள் பெருவாரியாக இருக்கின்றன. குறிப்பாக, கோயம்புத்தூர் ஜில்லாவில் போடப்பட்டிருக்கிற கேஸ்களில் தாழ்த்தப்பட்ட மக்களின் பேரில் போடப்பட்ட கேஸ்கள் 50 சத விகிதத்திற்கு மேல் இருக்கின்றன. அதேபோன்று வட ஆற்காடு ஜில்லாவில் 35 சத விகிதத்திற்கு மேல் இருக்கின்றன. ஆகவே, வேண்டுமென்றே எழை மக்கள் மீது இது போன்ற கேஸ்கள் போடப்படுகின்றன என்பதை சர்க்கார் உணருமா ?

MR. SPEAKER : இந்தக் கேள்வி 'அவுட் ஆப் ஆர்டர்'. கேள்வி நேரத்தில் 'இன்ஸினுவேஷன்' கூடாது. மந்திரி அவர்கள் பதில் சொல்லுவதாயிருந்தால் எனக்கு ஆட்சேபனை இல்லை.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மதுவிலக்கு குற்றங்கள் பற்றி நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவதில் எப்போதும் கனம் அங்கத்தினருக்கு புகார் உண்டு. ஆனால் ஒரு சட்டம் ஏற்பட்டு, அந்த சட்டத்தை மீறினால் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவதை தடுக்க முடியாது. எந்த இனத்தைச் சேர்ந்தவரானாலும் சரி, யாராயிருந்தாலும் சரி, குற்றம் செய்தவர்கள் பேரில் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

SRI T. T. DANIEL : From the paper placed on the table of the House, we find that the number of persons belonging to the backward and depressed classes is steadily increasing from year to year so far as Prohibition cases are concerned. May I know from the Hon. Minister whether the Government have actually gone into the question to find out the reasons for such increase in their number

---

a Printed as Appendix I on pages 114–115 infra.

3rd April 1958]

and to find out whether it is due to the fact that many of the prohibition cases end in acquittal or whether it is on account of the fact that because of economic backwardness, they resort to this kind of thing?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There are several reasons behind it and one of the reasons is that some of these poor people, a large number of the backward classes, are made the cat's paw by vested interest.

SRI T. S. RAMASWAMY PILLAI : புள்ளி விவரங்களைப் பார்க்கும்போது, வட ஆற்காடு, கோயம்புத்தூர், செங்கற்பட்டு ஜில்லாக்களில்தான் மதுவிலக்குச் சட்டத்தை மீறும் குற்றங்கள் அதிகமாக இருக்கிறது என்று தெரிகிறது. ஆகையால் அந்த ஜில்லாக்களைச் சேர்ந்த அமைச்சர்கள் தங்கள் தங்கள் ஜில்லாவில் மதுவிலக்குச் சட்டத்தை மீறும் குற்றங்கள் செய்யப்படாமல் பார்த்துக்கொள்வதில் பிரத்யேக கவனம் செலுத்துவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : விசேஷ கவனம் செலுத்தப்பட்டதால்தான், கேஸ்கள் அதிகமாகி வருகின்றன.

SRI P. S. SANTHANAM : மதுவிலக்குச் சட்டத்தை மீறும் குற்றங்களில் இரண்டு வகைகள் உண்டு. மது தயாரிப்பது ஒரு குற்றம். மது குடிப்பது இன்னொரு குற்றம். வட ஆற்காடு ஜில்லாவில் சாராயம் குடிக்கும் குற்றம் செய்த தாழ்த்தப்பட்ட மக்கள் எத்தனை பேர் ? அந்த ஜில்லாவில், சாராயம் காய்ச்சும் குற்றம் செய்த தாழ்த்தப்பட்ட மக்கள் எத்தனை பேர் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்த விவரங்கள் என்னிடம் இப்போது இல்லை.

SRI N. MARUDACHALAM : மதுவிலக்குச் சட்டத்தின் கீழ் தண்டிக்கப்பட்டவர்களில் எவ்விதத் தொழிலும் இல்லாத தாழ்த்தப்பட்ட மக்கள் எத்தனை பேர் ? தொழில் இருந்தும் குற்றம் செய்த தாழ்த்தப்பட்ட மக்கள் எத்தனை பேர் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்த விவரம் என்னிடம் இல்லை.

SRI M. JAGANNATHAN : May I know, Sir, what steps the 8-40 a.m.
Government propose to take to create the possibility of foisting false cases for boosting up the statistics of the offences?

MR. SPEAKER : The hon. Member is making an insinuation. He must put a question.

SRI M. JAGANNATHAN : The Hon. Minister is prepared to answer, Sir . . .

MR. SPEAKER : If the hon. Member does not listen to me, I will have my remedy. If the hon. Member persists, I will have to rule it out of order. I rule it out of order.

SRI A. A. RASHEED : From the statement placed on the table of the House, it is seen that even in the case of Caste Hindus, the number of cases tried is given as 84,203. What is the reason for such large numbers that have been tried in the case of Caste Hindus, Sir?

[3rd April 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM : In the matter of commission of offences, even if it is Caste Hindus, there is and there can be, no caste distinction.

SRI V. K. KOTHANDARAMAN : மேஜையின் மேல் வைக்கப்பட்டிருக்கும் புள்ளி விவரங்களைப் பார்க்கும்போது, மது விலக்குச் சட்டத்தின் கீழ் வழக்குகள் வருடாவருடம் அதிகமாகி வருகின்றன என்று தெரிகிறது. ஆனால், கனம் அமைச்சர் அடிக்கடி "மதுவிலக்குத் திட்டம் வெற்றிகரமாக நடந்து வருகிறது. மது அருந்துபவர்களை நாங்கள்அடக்கிவிட்டோம்" என்று சொல்லி வருகிறார். புள்ளி விவரங்கள் அதற்கு மாறாக இருப்பதால், இனிமேலாவது, மது குடிக்கும் பழக்கத்தைக் கொண்டவர்களை அவர்கள் அடக்கமுடியவில்லை என்பதை கனம் அமைச்சர் ஒப்புக்கொள்வாரா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 1957-ம் வருஷம் வரையில் தொடரப்பட்ட வழக்குகள்பற்றித்தான் புள்ளி விவரங்கள் இருக்கின்றன. இப்போது சில ஜில்லாக்களில் கேஸ்கள் பெருவாரியாகக் குறைந்திருக்கின்றன. மேலும், கேஸ்களின் எண்ணிக்கையைக் கொண்டே, குற்றங்கள் அதிகரித்திருக்கின்றனவா இல்லையா என்று சொல்லமுடியாது என்று சொல்லிக்கொள்கிறேன்.

SRI T. KARIA GOUNDER : கனம் அமைச்சர், மதுவிலக்குச் சட்டத்திற்கு திருத்தங்களை சட்டசபையில் கொண்டுவந்தார் ; சட்டம் திருத்தப்பட்டது. சட்டம் திருத்தப்பட்டதற்குப் பிறகாவது குற்றங்கள் குறையும் என்று கனம் அமைச்சர் நம்புகிறாரா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த விஷயத்தில் ஜோஸ்யம் சொல்ல முடியாவிட்டாலும், அந்த நம்பிக்கையுடன்தான் சட்டத்திற்குத் திருத்தங்களைக் கொண்டுவந்தேன். அந்த நம்பிக்கை எனக்கு மட்டுமின்றி இந்த மன்றத்திற்கும் இருக்கிறது ; ஏனென்றால், என்னுடைய நம்பிக்கையுடன் மட்டுமின்றி இந்த மன்றத்தின் நம்பிக்கையுடனும்தான் சட்டம் திருத்தப்பட்டது.

SRI A. VEDARATHNAM : மேஜையின் மேல் வைக்கப்பட்டிருக்கும் பதிலிலிருந்து, மதுவிலக்குச் சட்டத்தை மீறும் குற்றங்கள் சிலவகுப்பாரிடையே அதிகமாக இருக்கின்றன என்பது தெரிகிறது. எந்த வகுப்பினர் முன்பு மது குடிக்கும் பழக்கத்தில் அதிகமாக ஈடுபட்டிருந்தார்களோ அந்த வகுப்பினரிடையேதான் இந்தக் குற்றங்கள் அதிகமாக இருக்கின்றன. இந்தக் குற்றங்களை அந்த வகுப்பார் செய்யாதபடி பார்த்துக்கொள்வதற்கு அரசாங்கத்தார் என்ன முயற்சி எடுத்துக்கொள்ளப் போகிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் முன்பே சொன்னேன் : இந்த வகுப்பார் தாங்களாக இந்தக் குற்றங்களைச் செய்வதில்லை; இவர்கள் வேறு சிலரால் பயன்படுத்தப்படுகிறார்கள்.

*State Transport*

* 534 *Q*.—SRI T. S. RAMASWAMY PILLAI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the total collection of the Kanyakumari Branch of the State Transport during the ten days of Suchindram Markazhi festival last year;

(*b*) if the collection for this year is less, the reasons therefor; and

(*c*) the number schedules of feeder lines cancelled during this season this year?